# அன்பு.

"பூசனைசெய்து புகழ்ந்து மனங்கரைந்து நேசி
நேசத்தா லீசனைத் தேடு"—ஔவை குறள்.

ச. தா. மூர்த்தி முதலியார்.

பல நூலாசிரியர்.



இரண்டாம் பதிப்பு.

இரங்கோன் & சென்னை
நவீனகதா புத்தகசாலையாரால்

இரங்கோன்:
கிருஷ்ணாஸ் எலெக்ட்ரிக் அச்சேந்திரசாலையில்,
பதிப்பிக்கப்பெற்றது.

1918




இதன் விலை.] [அணா 1.

# அன்பு

"அன்பின் வழியது உயிர் நிலை அஃதிலார்க்கு
என்பு தோல் போர்த்த வுடம்பு"



என்பது பொய்யாமொழி. இதன்வாயிலாக வெளியாவதென்னெனின்? அன்பை யெய்தப்பெறாத உயிர்வருக்கம் உலகத்தில் யாண்டுமே இல்லையென்பதே. அவ்வாறு ஏதேனுமொன்றுளதாயின் அது உயிர்த்தொகையுள் வைத்தெண்ணத்தக்கதன்றென்பதையும் வலியுறுத்தா நிற்கிறது. எனவே அன்பு என்பதை அமையப்பெறாத உயிரோ உலகத்துக்கிடையாதென்பது ஒப்ப முடிந்ததோர் உண்மையாம்.

மேலும் ஜீவன், ஆத்துமம் என்று உடலினிடமாகவிருக்கும் இரண்டில் ஜீவனே உயிரென்றும், ஆத்துமம் என்பதே உயிரினிலையாம் ஈஸ்வரனின் சான்னித்தியம் என்றுங் கொள்ளப்படுகின்றனவல்லவா? இவைகளில் பின்னதே அன்பு என்றுஞ் சொல்லப்படும்.

"அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந் திருந்தாரே."

என்ற திருமூலர் திருவாய்மொழியை கவனிக்கின் இது விளங்குறும். இங்கு சிவம் என்று கூறியதை முத்தொழில்களுக்குள் ஒருதொழிலுக் கதிதேவதையாகிய சிவன் என்று குறுகிய விதத்தில் கருத்தமைத்துப் பார்க்கற்க. நாமரூபமற்ற பரம்பொருளையே 'யீண்டு கூறியுள்ளது. ஈஸ்வரதத்துவத்தையே யென்க.

இவ்வாறாகிய அன்பு என்பது என்னென்றாராய்ந்துழி, அது பொதுவகையில் ஒருவன் தான் நனி விரும்பியதோர் பொருளினிடத்திலோ அல்லது பலபொருள்களினிடத்திலோ கொள்ளும் உள்ள நிகழ்ச்சி யென்றேற்படும். இவ்விதமாகிய

விருப்பம் எல்லாஜீவராசிகளுக்கும் இயற்கையிலேயே யமைந்திருக்கிறது. இதனானே அன்பே சிவமென்றனர். எப்படி பரம்பொருளென்று ஒன்றில்லையேல் உலகமே யில்லையாகமுடியுமோ அப்படியே அன்பு என்னுந் தொடக்குமில்லையேல் உலகத்தில் உயிர்த்தொகையே யில்லாததாக முடியும்.

சிறிய எறும்புமுதல் பெரிய யானை யிறாகவுள்ள எல்லா ஜீவ வருக்கத்தினிடத்தும் இவ்வன்பின் சார்பு இருக்கக் காணலாம். எறும்புக் கூட்டங்களை நாம் கூர்ந்து பார்ப்போமேயானால் ஓரிடத்திலேதும் உணவுப் பொருளிருக்க ஒரு எறும்பு காணுறின் அந்த விஷயத்தை அது தான்காணுறும் எல்லா எறும்புகளுக்கும் பேசிப்போவதையும்; சில எறும்புகள் தங்களுக்குப் பாரமான வொரு பதார்த்தத்தை யிழுத்து வருமேல் அதைக்காணுறும் பல வெறும்புகள் உதவிபுரிய அவைகளோடு சேர்ந்து அவ்வலிய பதார்த்தத்தைத் தாங்கிச் செல்லுதலையுங் காணலாம். காகம்—கேவலமாக மதிக்கப்படும் பறவையினத்தைச் சேர்ந்தது—ஓரிடத்திலேதும் உணவுக்குரிய பொருளிருக்கக் காணின் உடனே கா! கா! வெனக் கூவி வேறு பல காகங்களை யழைத்து அதன்பிறகே அப்பொருளை யுண்ண வாரம்பிக்கிறதையும் காண்கிறோம். இல்வாழ் பிராணிகளாகிய நாய் பூனை முதலியவைகளிடத்தும் தம்மினமென்னுஞ் சார்பினால் ஒன்றையொன்று கட்டித்தழுவுதலைக் கண்கூடாகப் பார்க்கிறோம். சில நாட்களுக்கு முன் ஓர் நாய் தன் எஜமானனாகிய குருட்டுப் பிச்சைக்கார னொருவனுக்கு வழக்கமாய் கடையிலிருந்து கடைக்காரனால் கூடையிலிடக் கொண்டுவரும் ரொட்டியை இரண்டு மூன்று நாட்களாகக் கொண்டுவரா தொழியவும், இது சங்கதியை அப்பிச்சைக்காரன் வேறொருவனுக்குச் சொல்லி அந்த நாய் வழக்கமாய்க் கொண்டுவரும் ரொட்டி இடைவழியில் யாரால் அபகரிக்கப்படுகிறதென்பதைக் கண்டு வரும்படியாயுரைக்கவும், அவ்வாறு கேட்டுக்கொள்ளப்பட்டவன் அந்த நாயின் பின்போய்ப் பார்க்கையில் அது வழக்கம்போல கடைக்குப்போய் வாயிற் கவ்வியிருந்த கூடையை வைத்ததும், அதனுள்ளிருந்த பணத்தை கடைக்காரன் எடுத்துக்கொண்டு ஒரு ரொட்டியை அதனுள்

வைத்தனனென்றும், நாய் வேகமாயோடி ஓர் பாழடைந்த வீட்டையணுகியதென்றும், அதனுள் நுழைந்து பார்க்கையில் அங்கே ஒருவலிமையிழந்த பெட்டைநாயும் அதற்கருகாமையில் நான்கு குட்டிகளுமிருந்ததாகவும், அவைகளுக்கு கூடையிலிருந்த ரொட்டியைக் கொடுத்துப்போட்டு வெறுங் கூடையுடன் பிச்சைக்காரனிடந் திரும்பியதாகவுங் கண்டுவந்து அப்பிச்சைக்காரனுக்குத் தெரிவித்ததாகவும் பத்திரிகையில் வாசித்துள்ளோம். இவையாவும் கேவலம் அன்பினுல் நடந்த சம்பவமேயாகும்.

இன்னும் காகம் குருவி முதலிய பட்சியினங்களைக் கவனிக்கின் அவைகளில் பெண்பறவைகள் அடைகாத்திருக்கையில் ஆண்பறவைகள் வெளிச் சென்று ஆகாரந் தேடிவந்து கொடுப்பதும், குஞ்சுகள் பொரிக்கப்பட்டபின் ஆணும் பெண்ணுமாக இரை கொண்டுவந்து தங்குஞ்சுகளுக்களிப்பதும் எல்லாம் அன்பின் மயத்தினுலேயே யென்பது வெளியாகாமற் போகாது. கானகத்தில் வாழ்ந்துறும் மரை, மான் முதலிய விலங்கினங்கள் மந்தை மந்தையா யொன்று கூடி மேய்வதும், யானைக்கூட்டங்கள் ஓர்காட்டிலிருந்து இன்னோர் காட்டுக்குப்போகுங் காலையில் வயதில் முதிர்ந்தவைகள் முன்னும், குட்டிகள் இடையிலும், மற்றவைகள் பின்னுமாக அணிவகுத்து தங்கள் கூட்டத்தவரில் எவருக்குங் கெடுதி நேரிடக்கூடாதெனக் காபந்தாய் நடத்தலும் இவ்வன்பின் காரணமேயாகும்.

இம்மிருகாசிகளல்லாமற்படிக்கு புலி சிங்கம் முதலியன, தனித்து வாழ்தலும் கொடூர குணமுமமைந்த இவைகள் தாமும், தங்கள் குட்டிகள்வரையில் ஆகாரந் தேடி யமைப்பதிலும் குலாவி விளையாடுதலிலும் அன்பைக் காட்டுவதைக் காணலாம்.

இவ்வாருகவே ஒவ்வொரு ஜீவராசியும், தத்தம் குணங்களுக்கும், பிறவமைப்புகளுக்குமியைந்தவாருக அன்புகொண்டுலவுதலைக் கண்கூடாகப் பார்க்கலாம்.

சிறந்த குணமாகிய பகுத்தறியுந் தன்மையைப் பெற்ற மானிடரும்—ஜீவ வருக்கத்தைச் சேர்ந்தவர்களாகையால்—

அன்பின் வயப்பட்டவரே யென்று நாம் சொல்லவேண்டிய தில்லை. ஆனால் மானிடருடைய உள்ள நிகழ்ச்சி பல்வேறு பொருள்களினிடத்தில் பலவகையில் செல்லுவதாயிருக்கிறது. ஆகையினால் மானிடர்கொள்ளும் அன்பு மாறுபட்ட தன்மையில் நிற்பதாகும். உதாரணமாக ஒருவன் மண் அதாவது பூமி தேடுவதன்மேல் உள்ளநிகழ்ச்சி கொண்டவனாயிருப்பான் அவனுடைய அன்பு பூமியை நாடியதாகும். வேறொருவன் பொன் தேடுவதில் விருப்பங்கொண்டவனாயிருப்பான் அவனுடைய அன்பு பொன்னின்மேற் சென்றதாகும். பிறிதொருவன் பெண்ணின்மேல் இச்சையுள்ளவனாயிருப்பான் அவனுடைய அன்பு பெண்ணை யொட்டியதா யிருக்கும். மேற்கூறிய மண், பொன் பெண்ணென்ற மூன்றையும் ஒருங்கே விரும்பியவனாகவும் ஒருவன் இருத்தல் கூடும். இவ்வகையாக, மனம் நிகழ்ச்சிகொண்ட வழிகளிலெல்லாம் அன்பு பாயுந்தன்மையிலிருக்கிறது.

இவ்வகையில் ஒருவன் தன்னுடைய ஈஸ்வரதத்துவமாகிய அன்பை மனஞ் சென்றவிடத்திலெல்லாங் கொண்டு செலுத்தலாமோவென்றால், அது முக்காலும் பொருந்தாததாகும். "தக்கவின்ன தகாதனவின்ன" வென்று பகுத்தறியுந் தன்மை வாய்ந்துள்ள மானிடர் இது நன்மையுடையது—இது தீங்கை விளைவிக்கக்கூடியது, இது நற்காரியம்—இது பேய்க்காரியம், இது மெய் இது பொய், என்று ஆராய்ந்து கைக்கொள்ள வேண்டியனவற்றை யனுட்டானத்திற்குக் கொண்டுவந்தும் விலக்கவேண்டியவைகளைக் கைக்கொள்ளாது வெறுத்து விலக்கியும் வருஞ் சுபாவமுடையோராகையால் பிற பொருளிடம் நேரிடும் உள்ள நிகழ்ச்சியை—அன்பை—பொதுவகையில் அவ்வகையில் பாஷாவிதி கருதி கூறினும், மெய்யன்பு இன்னது பொய்யன்பு இன்னது என்று பாகுபடுத்தியுள்ளார். மெய்யன்பு என்னவென்றாலோ? என்றும் நிலைத்திருக்கக்கூடிய அன்பாகும். அது எப்படி யமையும்? உலகில் நிலைபெறுடையது ஒன்றுமில்லையே யென்கிற கேள்விகள் பிறப்பிக்கப்படுமல்லவா? அதற்குச் சமாதானங் கூறுவாம் அன்பு ஈஸ்வர தத்துவமென்று கூறினோம், அதுவே

ஆத்மாவெனவுங் கிளந்தோம். ஆத்மா யாதொரு பரம்பொருளைப்போல் அனாதியானதென்பதையு மறிந்துள்ளோம் ஆகவே ஆத்துமாவாகிய அழிவற்ற நிலைபேறுடையது, தான் விருப்பங்கொள்ளும்—தன் உள்ள நிகழ்ச்சிக்கு இடங்கொடுக்கும், பொருளும் அவ்விதத்திலேயே நிலைபேறுடையதா யிருக்க வேண்டும். அத்தகைய தெது வென்றால்? அது ஆண், பெண், அது, அவை என்னும் பால்வகையி லகப்படாததாகிய பரம்பொருளாகும் ஆகவே பரம்பொருளின்பாற் செலுத்தப்படும் அன்பு ஒன்றே அன்பு என்னும் பெயரைச் சிறப்புவகையில் தாங்கிநிற்குந் தன்மையிலிருக்கிறது. இவ்வாறமையாது ஏனைய நிலைபேறற்ற—என்றேனும் அழிதல் என்னுங் குணமமைந்துள்ள—பொருளாகிய மண், பொன், பெண்ணென்பவைகளிடத்துச் செலுத்தப்படும் அன்பு பொய்யன்பென்றும் வேறுபெயர்கள் பல கொண்டுங் கூறப்படுவதாகிய உள்ளநிகழ்ச்சியாம்.

இனி, அன்பு எத்தன்மை வாய்ந்தது, பொய் யன்பு என்ன கேடுகளை விளைவிக்கும், மெய் யன்பு என்ன நலங்களை நல்கும் என்பனவற்றைப்பற்றி யாராய்வாம்:—

அனபு இன்ன தன்மையுடையதென்று ஒருவர் மற்றொருவருக்குப் பிரமாண திருட்டாந்தத்தினாலோ வேறெவ்வகையினாலுமோ காட்டக்கூடியதன்று. அது பூவில் மணம்போலவும் எள்ளில் எண்ணெய்போலவும் நம்மிலிருந்து பிரிவுபடுத்தக் கூடாத தன்மையில் விளங்குறுவதாகும். ஒருவன் சர்க்கரை எத்தன்மையதென்று மற்றொருவனை வினவில், அவன் அது இனித்தற்றன்மை யுடையதென்று கூறுவன். இனிப் பெவ்விதத்து என்று வினவின் அதை எவ்வாற்றானும் தன்னுடைய தேகவுருப்புகளை யெல்லாம் அசைத்துக் காட்டினுங் காட்ட முடியாதுபோனவனாவான். ஆனால் சர்க்கரையை ருசித்துப் பார்த்தால் அநுபவ பூர்வமாயறிந்தவனாவான். இதுபோலவே அன்பு எத்தன்மையுடையதென்று வெளியிடத்திலிருந்து அறிந்துகொள்ளுந் தன்மையதன்று. ஒருவன் தானாக அன்பு கொண்டவனானாலன்றி அதை அறிதற்குக் கூடாமையாகும்.

அன்புதான் ஈஸ்வர தத்துவமாய் ஒவ்வொருவரிடத்தும் விளங்குகிறதே இதை யநுபவ பூர்வமாயறியாத வொருவனு முளனோ வென்னின்? இங்கே அன்பு என்ற பொழுதெல்லாம் மெய்யன்பு என்றுகொள்ளவேண்டும். இந்த பகுத்தறிவில் மயங்காதிருக்கும் வண்மைம் மெய்யன்பு இன்னது என்பதை மீட்டும் விளக்கிக்கூறுவாம்.

அன்பில் மெய்யன்பு பொய்யன்பு என்று இருவித அன்பு இருக்கின்றனவா வென்றால்? உண்டு. இதனையே பொய்யா மொழியாரும்.

"அறத்திற்கே யன்பு சார்பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை."

பென்று கூறினர்.

இனி, மெய் யன்பு என்பது மெய்ப்பொருள்—அழிதல் என்றுங் கிரியைக்கு அகப்படாது என்றும் நிலைபேறுடைய பொருள்—பால் நிகழுறும் உள்ள நிகழ்ச்சியென்று மேலே கூறியுள்ளோம். இதுவொன்றுதான் அன்பு. இதற்கே பக்தி பென்றுஞ் சொல்லுவதுண்டு. நம்முடைய விபாஸத்திற்கு இனி இதை அன்பு என்றே கூறுவாம்.

இனி பொய்யன்பு அதாவது அன்பு என்னுஞ் சிறந்த பெயரைக்கொள்ளவமையாதது எதுவென்றாலோ? அதுதான் பொய்ப்பொருள் அ தா வ து நிலைபேறற்ற பொருளின்பாற் படுத்தப்படும் உள்ள நிகழ்ச்சியாம், இதற்கு உள்ள வழக்கில் அமைந்த பெயர்கள் பலவுள. அவையாவன:—ஆசை, பாசம், பட்சம், காதல், நேசம், நயை என்று எந்தெந்த பொய்ப்பொருளின்மேல் உள்ளம் நிகழ்ச்சியுறுகிறதோ அத னதன் தன்மைக்கேற்பப் பொருள்தந்து நிற்கும். ஒருவன் தன் தாய் தந்தையர் பாற்காட்டும் அன்புக்குப் பட்சமென்று கூறப்படும், அவர்கள் தம்மக்கள்மேற் காட்டும் அன்புக்குப் பாசம்என்று சொல்வர், மனைவியின்மேலோட்டும் அன்புக் குக் காதலென்றும் சிநேகிதனிடம் பாராட்டுமன்பை நேச மென்றும்—அன்னியோன்னிய மென்றும், குருவினிடத்தில் நிகழுறும் அன்புக்கு வணக்கமென்றும், எஜமானனிடத்தில்

காட்டுமன்புக்கு விசுவாஸமென்றும், தாழ்ந்தோர்களிடத்து வெளியிடும் அன்புக்கு கருணையென்றும் கிருபையென்றும், பிறஜீவர்களிடத்துக்காட்டுமன்பை தயையென்றும் இப்படிப் பலவகையான பெயர்கள் கொண்டுவிளங்குந் தன்மையுடைய தாகும். பொதுவகையில் இவ்விதமாகிய அன்பு-பொய்யன்பு—ஆசையென்னும் பெயராலேயே யழைக்கப்படுதலுமுண்டு. நாமும் மெய்யன்பை அன்பு என்றழைக்க இசைந்ததுபோல, பொய்யன்பை இனிமேல் ஆசை யென்றேபகருவாம்

இந்த ஆசை, இன்பம் துன்பம் இரண்டையுமளிக்கக்கூடியது. இன்பமளித்தாலும் அதுநீடித்த நிலையுள்ளதாயிருக்காது. துன்பம் பயந்தகாலையில் அது தொடர்ந்து நிற்குந் தன்மையினதாயிருக்கும். நீடித்த இன்பத்தையேன் அளிக்காதென்றாலோ? தான் கொண்டு செலுத்தும் அன்பை யேற்றுறும் பொருள்கள் நிலைபேறுடைய இன்பத்தை யுடையதாயிருப்பின் அதன்மீது அன்புகொண்டவனும் இன்பமுற்றிருக்கவமையும். ஆனல் அப்படியல்லாமல் அவைகள் அழிவுறுந் தன்மையிலிருக்கக்கூடிய பொய்ப்பொருள்களாகையால் அவைகள் இன்பமுற்ற காலையில் தான் இன்புற்றும், மற்று அவைகள் துன்பமுற்றகாலையில்தான் துன்புற்று மிருக்கவேண்டியதாக ஏற்படும். தான் அன்பு கொண்டு செலுத்தும்பொருள் துன்புறாமலிருக்க வழிதேடவும் மனிதன் அசக்தனயிருக்கிறன். உதாரணமாக மனைவிமக்களிடத்தில் அன்பு கொண்டொழுகுபவன் அவர்கள் சகல சௌக்கிய சம்பன்னர்களாயிருக்கும்பொழுது அவர்களுடைய சுகத்திலீடுபட்டதானும் சந்தோஷமாயுலாவி வருகிறன். ஆனல் அவர்களுக்கு ஏதும் துன்பமோ சௌக்கியக்குறைவோ ஏற்பட்டால் அவர்களின் வயப்பட்ட தானும் அவர்களுடைய துன்பத்தைப் பகிர்ந்து கொண்டவனகிறன். இதுபோலவே பொன்னினிடத்தில் பிரியங்கொண்டவன் அதைச் சேகரித்தலில் ஈடுபட்டவனகி அதுவும் அவன் விரும்பியவண்ணமே சேர்ந்துறுமேல் இன்பங்கொண்டவனகிறன். ஆனல் தான் சேமித்த பொருளுக்கு அழிவுநேரிடுமேல் அதனில் வயப்பட்ட தான் அதன் அழிவிலும் ஈடுபட்டுத் துன்பமுறுகிறவனகிறன். இதுபோ

லவே மன் பெருதலிறும் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் பாத்திய முடையவனுகிறுன். மற்ற பொருள்களினிடத்தில் காட்டுறும் அன்பும் அதன் பயனும் இவ்வித அசம்பாவிதங் களேயே நல்குநர் தன்மையிலுள்ளதைக் காணலாம். இந்த ஆசையாகிய பொய்யன்பு உலகத்தில் மாயா சம்பந்தமுடைய தாகையால்; தான் சதா விரும்பிவந்த பொருள் அழிவுற்ற மேறும் அதன் பாற்காட்டியிருந்த ஆ சை யொ ழி யா து பொருளழிந்தும் அதன்வழி யேற்பட்ட துன்பம் நீங்காது— நீடித்த கவலையைக்கொண்டு சேர்க்கும். இன்ன திங்கை இந்த ஆசை விளைவிப்பதனுல்தான் ஆசையெல பதை எவ்வளவு சிறந்த நோக்கத்தின்பாலதா யிருப்பினும் கொள்ளற்க வென்று மஹான் திருமூலர் இவ்வண்ணம் இதோபதேசஞ் செய்துள்ளார்:—

“ ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள்
ஈசனேடாயினும் ஆசையறுமின்கள்
ஆசைப்படப்பட வாய்வருந்துன்பங்கள்
ஆசைவிடவிட வானந்தமாமே.”

இதைப்பார்க்கினும் சிறந்ததோர் உபதேசம் நாம் கேட்டற்குக் கூடாமையாகும்.

இந்த ஆசையை விலக்க வேண்டுமென்று கூறவந்த பொழுது ஔவை மூதாட்டியாரும் “மோகத்தை முனி” யென்று சுருக்கியிசைத்தனர். இதன் கண்ணமைந்துள்ள அர்த்த விசேடத்தைக் கவனித்துப் பாருங்கள். ஆசையை சினந்து விலக்கு என்றார். எனவே அதை முதற்கண்கொள் ளப்படாது, உன்னையறியாமல் அது உன்னிடம் வந்துசேர்ந்து விடுமேல் அதைச்சினந்து விலக்கு. ஏன் அப்படி விலக்க வேண்டுமெனில்? விலக்காதவிடத்து அது உன்னுள்ளிருந்து கொண்டு நாளுக்குநாள் செழித்தோங்கி வளரும், அப்படி வளருங்காலையில் நீ மாளாத்துயர்கடலுளாழ நேரிடும். ஆகை யினுல் அதற்கு இடங்கொடுக்காமலும் உன்னையறியாது வந்து சேருமேல இரக்கங் காட்டாமல் முனிந்தும் விலக்கு என்றுப தேசித்தனர்.

பிறிதொரு விஷயமும் கவனிக்கற்பாலதாம். இந்த ஆசைபென்னும் பொய்யன்பு கைம்மாறு கருதியவன்பாகும். எவ்வாறெனின் ? ஒருவன் தன் தாய்தந்தையரிடத்து அன்பு செலுத்துவதின் காரணம், அவர்கள் தனக்கு உண்டி யுடை கல்வி முதலியன கொடுத்துதவுதலினால். அவ்வாறே அவர்கள் தம்மக்கள்மேற் காட்டுமன்பும் தம்மைத் தம்முடைய வலிமை யிழந்த காலத்தில் தம்மக்கள் காப்பாற்றுவார்களென்னும் நம்பிக்கை கொண்டேயாம். எஜமானன் பணியாளனிடத்தில் காட்டும் பட்சமும் அவ்வாறே, பணியாளன் தன் எஜமானனிடத்தில் பிறதி பலிக்கச் செய்யும் விஸ்வாசமும் நல்லெண்ணத்தையும் கைக்கூலியையும்எதிர்பார்த்த வகையில் கைம்மாறு கருதியேயாகும. ஒன்றை யெதிர்பார்த்த அன்பு, எதிர்பார்த்த பொருளோ எண்ணமோ கைகூடாதபோது, துன்பத்தை விளைவிக்குமாகையால் இவ்வகையாலும் பொய்யன்பு இன்பம் நல்குவதாயில்லாமையைக் காணலாம். இதுவல்லாமல் பொய்யன்பு பயக்கும் துன்பம், தொடர்ச்சதன்மையினதாகவுமிருக்குமென்றேம். அது எவ்வாறெனின்? ஒருவன் ஆசையின் வயப்பட்டு நிலையற்ற பொருள்களின்மேல் தன்னுடைய உள்ளத்தை நிகழச்செய்து வறிதே காலங்கழித்து வருவனேல் வினைவலியால் சித்திக்கப்பட்ட ஆசைகள் பல தோன்றும் ; அவைகளுக்காக அவைகளை யனுபவிக்க வேண்டுமென்னும் ஆனித்தாமானவெண்ணங் காரணமாக-பல பிறவிகள் எடுக்குந் தன்மையனாகிறான். எடுக்கும் பிறவிதோறும் ஆசைத்திரள்கள் குவிந்துகொண்டே போக உயர்ந்தபடியாகிய மனித ஜன்மத்திலிருந்து கீழ்ப்படிகளுக்கு இறங்குந் தன்மை யெய்தி மீண்டும் மேலேற வகையறியாது வருந்தி எண்ணற் கடங்காத் துன்பத்தொடரில் விழுவான். இதனாலன்றே பொய்யாமொழியாரும்,

"அவா வில்லார்க் கில்லாகுந் துன்ப மஃதுண்டேல்
தவா அது மேன்மேல் வரும்."

என்றார். உடம்பு பெற்றதே அவா அதாவது ஆசையினாலாகையால் அந்தத் துன்பத்தையே யொழிக்க வகையறியாமல், மீண்டும் அவாக்கொள்வோமேயானால் அத்துன்பத்திற்கு ஓர்

முடிவில்லாமல் தொடர்ந்துகொண்டே போகுமென்றார். அவாவில்லாதவர்களே துன்பத்தை யொழித்தவர்களாவார்கள். துன்பத்தை யொழிக்கவே, அதுகொண்டு பயக்கும் பிறவிப் பிணியை நீக்குந்தன்மையும் எய்துவார்களென்பது தானே பெறப்பட்டதாயிற்று.

"அற்றவரென்பா ரவாவற்றார் மற்றையர்
அற்றாக வற்ற திலர்."

என்ற குறளடியையுங் கவனியுங்கள்.

இச்ஜன்மம் லகுவில்கிடைத்ததென்று எண்ணப்படாது. பல கீழ்ப்பிறவிகளில் எண்ணிலா நன்மைகள் செய்து அந்நன்மைகளின் பயனாகவே கிடைக்கப்பெற்ற வோர்பொக்கிஷமாம். இவ்வாறு பெருமுயற்சியால் கிடைத்த ஜன்மத்தை இன்னும் மேற்படியில் ஏற்றிவைக்க வழிதேடாமல் கீழிறக்குவோமேயானால் நம்மினும் கேவலமான மிருகம் வேறொன்றிருக்காது. மிருகவருக்கத்திலும், பட்சி யினங்களிலும் பல தம் தம்முடைய நற்றவத்தின் பயனால் வீடுபேறெய்தியதென்று நம்முடைய புராணங்கள் வாயிலாக அறியா நிற்கிறோம்.

இனி துன்பம் தராது இன்பமொன்றையே எக்காலத்தும் யாண்டும் அளித்துவருவது மெய்யன்பேயாகும். ஏனெனில்? அது என்றும் நிலைத்திருக்கக்கூடியதும், அழிவற்றதும், யாதொரு தேகசம்பந்தமுறாததும், எல்லையில்லாத இன்பத்தையுடையதுமாகிய பரம்பொருளின்பாற்படுத்தப்படும் அன்பாகையால், அவ்வன்பும் அழிவற்றதாய், நன்மை பயப்பதாய், எல்லையில்லாத இன்பம் நல்குவதாயிருக்கும். அதனிடத்து துன்பமென்பதே கிடையாதாகையால் அதைச்சேருவோனும் துன்பமில்லாது இன்பமே யெய்துகிறான். அது என்றும் இன்பமயமாயுள்ளதாகையால் அதன்கட் சேருபவனும் இன்பக்களஞ்சியமா யொளிருகிறான். இம் மெய்யன்பு பரம்பொருளின்பாற் செலுத்தப்படும்பொழுது அது நிஷ்காமியமானதாயிருக்கவேண்டும். அப்பொழுதுதான் அது நிலையுள்ள வீடுபேற்றை யளித்து அழிவில்லாத இன்பத்தையுமளிக்கும். அவ்வாறின்றி காமியமானதா யிருக்குமேல், அது நிலையற்ற பொருள்களை யடையவேண்டிச் செலுத்து மன்பாகையால்,

தான் கோரிய பொருள்கள் தான் கோரிய வண்ணமே யெய்தப்பெறினும், அவைகள் கிடைத்தவண்ணமே யழியுகாலம் வந்தகாலேயில், கிடைத்தபொழுது இன்புற்றிருந்து அழிந்த பொழுது துன்பமெய்தி தான் முதற்கொண்ட அன்பையொழிந்து மாளாத் துயரத்துக் காட்பட்டவனுவான்.

அவ்விதமல்லாமல் நிஷ்காமியமாக ஒன்றையு மெதிர்பாராது-கொள்ளும் மெய்யன்பு மூவகைத்தாம். அவை:— தலையன்பு—இடையன்பு—கடையன்பு என்று வழங்கப்பெறும்.

இவற்றுள் தலையன்பென்பது, சிறந்த அன்பாம் இடைவிடாது ஓடிக்கொண்டிருக்கும் நீர்ப் பெருக்கிற்கு ஈடானது. தானுகச் சுரந்து வெளிப்பாயும் ஊற்றுநீர் ஓரிடத்தினின்றும் வழிக்கொண்டு வெளியே வோடிவருமேல் அதனை எவராலும் தடைப்படுத்தச் சாத்தியமாகாததாகும். அது தன் வழியில் பாய்ந்துகொண்டே யிருக்கும். இதுபோலவே தலையன்பு கொண்ட பெரியார்கள் தங்கள் பாட்டில் பிறர் தமக்கு எவ்விதமாகிய தீங்கியற்ற முன்வரினும் அவற்றைக் கவனியாது தம்முடைய உள்ளத்தை இறைவனிடத்திலிறுத்தி தம்மைமறந்து பேரின்பத்திலீடுபட்டு பேரின்பமயமாகவே விளங்குறுவர். தாம் வேறு இறைவன் வேறு என்னும் வித்தியாஸமே யில்லாமல் தற்போதம் ஒழித்து எல்லாந்தாமே யென்னும் சொலற்கரிய போகத்திலமர்ந்து அழிதலில்லா வின்பத்தை யனுபவித்துக்கொண்டிருப்பார்கள்.

தேகத்திற்கே அணிகலனுயிருந்து விளங்கும் தன்கண்களை-அவைகளை யப்புறப்படுத்துகையில் யாதொருவலியுமுறுமல்-தனக்கே யோர் பெருந்துபருற்றதுபோலும், அதை நீக்கப் பலமுயற்சிகள் தேடுவதையொப்ப, பலமூலிகை சிகிச்சைகள் செய்தும் பயன்பெறுமல் தன்கையாயுதங்கொண்டு, முதலில் ஒருகண்ணையும் அதன்பிறகு மற்றோர் கண்ணையும் பெயர்த்து எம்பெருமானுக்கு அர்ப்பணஞ் செய்த கண்ணப்பன் செயலைக் கவனியுங்கள்: இப்பெரியாருடைய அன்பே தலையன்பாம். அன்பே ஒருருவு தாங்கிவந்து அழுது தொழுது ஆனடிக்கே அடிமை கொண்டொழுகிய மாணிக்கவாசகப்பெருந்தகை யாரே கண்ணப்பனுடைய அன்பைப் பெரிதுங் கொண்டாடி

னுென்றால் அச்சில வேடனுடைய அன்பின் மாட்சியைத் திறம் வாய்ந்ததா யிருக்கவேண்டும்!

"கண்ணப்பன் ஒப்பதோ ரன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பி லென்னையுமாட் கொண்டருளி
வண்ணப்பணித் தென்னை வாவென்ற வான்கருணை
சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பி."

என்பது மணிவண்ணப்பெருமானின் திருவாய்மொழியாகும்.

இடையன்பென்பதோ, நெய்க்குச் சமானமானதாகும். நெய்யானது அனலைக் கண்டக்கால் உருகாநிற்கும். அதனி லிருந்து அகன்றவிடத்து சிறுகச் சிறுக இறுக்கங்கொள்ளத் தலைப்படும். இதுபோல இடையன்பு பூண்டோர் எம்பெருமான் திருக்கோலங் கொண்டெழுந்தருளிய ஆலயங்களையோ அவருக்குத் தொண்டுகொண் டொழுகும் அடியவரையோ கண்டவிடத்து என்பெலாம் நெக்குடைய உடல் புளகாங்கிதமடைய கண்ணிருந்த்த நாத்தழுதழுப்ப அன்பொழுகவணங்கி நிற்பவராவர். ஆனால் அவ்வாலயங்களைவிட்டு அகன்றதற் பின்னரோ அல்லது அடியவர்கள் தங்களைவிட்டு நீங்கியபிறகோ உலகவியலில் ஈடுபட்டு மீண்டும் வாழ்க்கைச் சம்பந்தத்திலுழன்று திரிபவர்களாவர்.

கடையன்பென்னெனிலோ, அது அரக்கின் தன்மையுடையதாகும். அரக்கு நெருப்பிற் காட்டப்படுந்தோறும் ஒருவாறுருகிநும் நெருப்பினிருந் தெடுபட்ட அந்தட்சணமே கெட்டியா யிறுகிவிடும். அதுபோலவே அவ்வன்புடையாரும் கடவுளாலயங்களையோ அடியவர்களையோ கண்டவிடத்து சிறிது பக்குவப்பட்டு அன்புடையோராவர். அவர்களிலிருந்தகன்றவுடனேயே அவ்வழியை அறவே மறந்து உலகாயதர்களாயிருப்பார்கள்.

மெய்யன்பு வெகு சிலரிடத்து மாத்திரம் தலை, இடை, கடை யென்ற வகைகளில், தங்வகையில் தோன்றுகிறபடியால் பிறவிக்குணம் என்றும் பூர்வ புண்ணியப்பேறு என்றும் வழங்கினர்கள். ஆனால் இது எல்லோருக்குமே கைவல்யமாதல் கூடும் எப்படியாகுமெனில்? அன்பு என்பது ஈஸ்வரதத்துவமா யெவ்வொருவரிடத்தும் விளங்கா நிற்கிறதென்று

முன்னர் கூறினேம். அதை பொய்ப்பொருள்களின்மீது பாயவிட்டு ஆசை, பாசம், பட்சம், காதல், நேசம் என்னும் பெயர்கள் தாங்குறும் வண்ணம் விடாமற்படிக்கு பரிபூரண சச்சிதானந்த மயமாயுள்ள பொருளின்மீதுகொண்டு செலுத்தி அன்பு என்னும் சிறப்புப் பெயர்கொண்டு விளங்கச் செய்ய வேண்டும். இதைப் படிப்படியா யமைத்துக்கொள்ளல் சாத்திய மாகும். சிறு பிராயத்தில் தாய்தந்தையர்பாற் காட்டிவரும் பட்சம் ஓர் வித்தியா குருவை யடைந்து அவரை வணங்கி மெய்ப்பொருளறிவதில் வணக்கமாக மாறுகிறது. அதன் பிறகு ஞானசிரியனையடுத்தமேல் அது வினயமாகத் திரிகிறது. பிறகு உற்ற வயதடைந்த பொழுது விவாகமென்னும் பிணை யால் பிணைக்கப்படுங் காலையில் மனைவியின்மேற் காதல் என் னும் பெயர்கொண்டு விளங்கி, அக்காதல் அதன் பயனுகப் பெற்ற மக்களின்மேல் பாசமாக மாறுகிறது. இப்பாசம் மிக்க வலிமையுடையதாகும். அந்தப் பருவத்தில்தான் அத னைக் களைதவிர்த்து பக்தியாக மாற்றிக்கொள்ள வேண்டும். மற்றவை யெல்லாம் வினைத்தொடர்பால், மாய்கையின் சம்பந் தத்தால், தாமாக அமைந்துறுமாயினும் பக்தியாகிய மெய் யன்பை மாத்திரம் ஒருவன் தானுகவருந்தித் தேடவேண்டும்.

இதை யனுசரித்தே ஔவை பிராட்டியாரும் "விடு பெற நில்" என்றுரைத்தனர். இதனுடைய பொருள்விளக்கம் வெகு சிறப்புடையதாகும். விடு என்றால் விட்டல் என்னும் பொருள் தந்து நிற்கிறது. ஒருவன் தான் எவ்வித பொருள் களோடு மனம் நிகழக்கூடிய விதத்தி லிருந்தபோதிலும் அவ் வித பொருள்களிலிருந்து நீக்கம் பெறும்படி, நில்-சிறந்த தொரு நிலையில் உன்மனம் பற்றுகொள்ளும்படி, அதாவது என்றும் நிலைபேறுடையதாயுள்ள பொருளில் பற்றுண்டாகும் படி, நிற்கக் கடவை யென்றனர்

என் இப்படிப் பிரயாசையோடு இதைத் தேடவேண்டு மென்னிலோ? மோக்ஷமென்னும் மெத்தையையடைய ஏற் பட்டிருக்கும் சரியை-கிரியை-யோகம்-ஞானம் என்னும் நான்கு படிக்கட்டினுள், பக்தி முதற்கண்ணுறு யமைந்துள்ள சரியையே யாகையினுல். ஆதலின் அதை யடைந்தால் தான்

மோக்ஷமென்னும் உயர்ந்தவிடம் அடையலாகும். இப்படி களின் வழியாயல்லது வேறுவிதமானமார்க்கம் கிடையாதோ அல்லது இவென்று மேற்கிளம்பல் கூடாதோ வென்றால்? முடியாது. இதுபற்றியன்றோ நம் தாயுமானவரும்

"விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே"

என்று திருவாய் மலர்ந்தருளினர். எப்படி கனியானது முறையே அரும்பு, மலர், காய் என்னும் பல படிகளல்லாது தோன்றாதோ அப்படியே ஞானமும் (அதன் முடிவாகிய மோக்ஷமும்) பக்தி (சரியை,) கிரியை, யோகம், இல்லாமற் படிக்குச் சித்திக்காததாகும்.

அவ்விதமாக அன்பைப்பெறாது போனால் நாம் மாளாத் துயரத்துக்குட்படுவோமென்பது திண்ணம்.

"என்பிலதனை வெயிற்போலக் காயுமே
அன்பி லதனை யறம்"

என்றார் நாயனார். அதாவது என்பில்லாத புழு முதலிய சிறு பிராணிகள் வெயிலினால் எப்படிக் கஷ்டமுறுகிறதோ அப்படியே அன்பில்லாத வொருவனை அறக்கடவுள் [காலன்] துன்புறுத்துவானும். ஆகையினால் நாமெல்லோரும் நம் வாழ்நாளில் பக்தியாகிய மெய்யன்பு தேடுதலிலேயே சிரத்தையுற்று அதைப்பெற்று அதன் பயனாகிய பேரின்பமெய்தி மனித ஜன்ம மெடுத்ததன் பயன் பெற்றுய்ய வேண்டுமென்பதே நாமொவ்வொருவரும் கொண்ட கொள்கையா யிருக்கவேண்டும்.

இவ்வன்பு பாசத்திலிருந்து மாற்றப்படுங்காலையில் கடையன்பாகவே முதலிலிருக்கும். அடுத்தடுத்து ஆலயங்களுக்குச் சென்றும் அடியார் தரிசனஞ் செய்தும் வருவோமேயானால் அதற்கு மேற்படியான இடையன்பு பெற்றவர்களாவோம். அதன்பிறகு தலையன்பாக மாறுதல் சுலபத்தில் முடியும், கடையன்பை நிலத்திலிட்டவிதை வெடித்து முளை கிளம்பியதாகக் கொள்ளின் இடையன்பை அவ்வாறுகிளம்பிய முளை கொடியெடுத்து அடுத்து நிற்கும் பற்றுக்கோலைத்தாவுஞ்

சந்தர்ப்பத்திற் கிணையாகக் கூறலாம். அதன்பிறகு அக்கொடி நீர் காற்று முதலிய உபகரணங்களால் தளிர்த்து வருவதை யொப்ப இடையன்பும் அடுத்துப் பழகும் பெரியோர்களுடைய உறவினாலும் சிரவணஞ் செய்துறும் பல வடியார்களுடைய சரித்திரங்களினாலும் தலையன்பாக மாறி முற்றும்.

பக்தர் பிரகலாதருடைய சரித்திரத்தை வாசிக்கின் கன்மனங் கொண்டோரையும் கனித்து வைக்குமல்லவா? தலையன்பு கொண்ட பெரியாரன்றோ அவர்? யாதொரு கைம்மாற்றையுங் கருதாது, உலகில் பரம்பொருளுண்மையை மறந்து அகம்பாவம் மேலிட்டு நின்ற காலையில் கடவுள் நிச்சயத்தை ஸ்தாபிதப்படுத்த விரதங் கொண்டபொழுது, அவரடைந்த துயரங்களுக்கு ஓர் எல்லையிருந்ததா? பலவிதமான இம்சைகளுக்கு ஆட்படுத்தப்பட்டபொழுது அவைகளை யெல்லாம் தாம் தாங்கி நின்றதும், அவைகளினால் தாம் வருத்த முறாதிருந்ததும் எதனாலென்றெண்ணுகிறீர்கள்? தாம் அன்பின் மயமாகவே யிருந்தபடியா லல்லவா? இப்பெரியார்முன் ஸ்ரீபரந்தாமன் தோன்றி "சத்தியத்தை நிலைநிறுத்த முயன்றதில் நீ எண்ணிலாத் துன்பங்களுக் காட்பட்டாய் உனக்கு யாதுவரம் வேண்டும்" என்று கேட்டருளியபொழுது என் வேண்டினார்?

"முன்பு பெறப்பெற்ற பேறே முடிவில்லை
பின்பு பெறும்பேறு முண்டோ பெறுகுவனேல்
என்பு பெறாத விழிபிறவி யெய்திடினும்
அன்பு பெறுகை யரும்பேறெனக் கென்றான்"

கேவலம் அன்பை யன்றோ வேண்டி நின்றார். அவ்வன்பும் உலகில் எவரும் விரும்பாத புழுப்பிறவி வாயப்பெறினும் தன்னை நீங்காது விளங்குவதாகிய அன்பு என்றல்லவா விண்ணப்பஞ் செய்துகொண்டனர். இதனால் நாம் அறிவதென்னெனில், அன்பு உலகில் தனக்குத்தானே ஒப்புவமை யுடையதா யிருக்கிறதென்றல்லவா?

காரைக்காலம்மையாரின் உயிர்த்துணையா யிருந்தது இவ்வன்பே யன்றோ? அன்புகொண்டு அன்பிலீடுபட்டு—அன்பின் மயமாகி-என்புத் தேகம் பெற்று அவ்வென்புதோறும் அன்

புருகி நிற்க, சிவ சன்னிதானஞ் சென்றபொழுது அன்பின் களஞ்சியமாகிய எம்பெம்மான் யாதுவரம் வேண்டுமென்று கேட்டருள அம்மையார் என் வேண்டினார்?

"இறவாத வின்பவன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டு மீண்டும் பிறப்புண்டே லும்மையென்று
மறவாமை வேண்டு மின்னும்வேண்டு நான்மகிழ்ந்துபாடி
யறவாநீ யாடும்போ தருடியின்கீழிருக்க வென்றார்"

கேவலம் அன்பையே வேண்டியதல்லாமல் அவ்வன்பும் என்று மிறவாது, எத்தனை பிறவிகள் எடுக்க நேர்ந்தாலும் தன்னிலிருந்து பிரிக்கப்படாமல் தொடர்ச்சியுடையதாயிருக்க வேண்டுமென்று வருந்திக் கேட்டனர். "உம்மை யென்றும் மறவாமை" வேண்டுமென்றார். அன்பிலீடுபட்டிருந்தபடியால் தாம் கேட்ட வரங்களெல்லாம் அன்பு கமழ்வனவாயிருந்தன. என்னே அன்பு! இவ்விதமாகிய சரித்திரங்களை நாம் படித்து வருவதால் நம்முடைய மாயா சம்பந்தமான பொய்யன்பு களை யப்பட்டு மெய்யன்பு செழித்தோங்குமென்பதில் யாதும் சந்தேகமுண்டோ?

அன்பே உருக்கொண்டு எழுந்தருளிய எத்தனை அடியவர்கள் நம் நாட்டிலும் பிற நாட்டிலும் இருந்தனர்களென்று அவர்களுடைய சரித்திரங்கள் வாயிலாக அறிகிறோம். இன்னும் அத்தகையோர்களிருந்து வருகிறார்கள். இனி யென்றும் இருப்பார்கள். நாமும் அவர்களுடைய உயர்நிலையை யடையக்கூடும். நாம் வருந்தி யுழைக்கின் பெறக்கூடியதாகையால் அவ்வாறு செய்யாதொழியின் நாமே நமக்குக் கேடு தேடிக் கொண்ட குற்றத்திற்காக அறக் கடவுளால் அதிகமாகத் துன்புறுத்தப்படுவோ மென்பதில் யாதும் ஆட்சேபமுண்டோ? யோசித்துக் கவனியுங்கள்!

சுபம்.



ச. தா. மூர்த்தி.

தமிழபிமானியர்களே!

## உங்களுக்கோர் விண்ணப்பம்.

உலகஞானம் புகட்டக்கூடிய நவீனங்கள் கீழ்காட்டியுள்ளவைகளே, இவைகளைப் படிப்போர், படிப்பதின் முன்னிருந்ததைப்பார்க்கிலும் அனுபவத்தில் முதிர்ந்தவர்கள் ஆவார்கள் என்பது திண்ணம்:—

### ஒவ்வொன்றின் விலை அணா 8.

1. கண்ணம்மாள் அல்லது கண்டதும் காதல்.
2. நாகரத்தினம் அல்லது விஷக்குண்டூசி.
3. சிவகாமி அல்லது தப்பியோடிய பெண்.
4. தியாகராஜன் அல்லது நல்லொழுக்கசீலன்.
5. அம்புஜவிலாசத்தின் அதிசயச்சம்பவம்.
6. மாணிக்கவல்லி அல்லது கள்வர்கூட்டத்தைக் கலைத்த கட்டழகி.

### ஒவ்வொன்றின் விலை அணா 6.

7. நீல அறையின் அதிசயம்.
8. என் தந்தையார் (பக்திரச நூல்).
9. கூடாவொழுக்கச் சகோதரன்.

### ஒவ்வொன்றின் விலை அணா 4.

10. அம்பிகாபதி அல்லது கம்பர் குமாரன்.
11. தபால்சரித்திர சாரசங்கிரகம்
12. அஸ்தபூஷணம் அல்லது அறன்கடை விலக்கு.
13. பதினாறுபேறு.

### ஒவ்வொன்றின் விலை அணா 2.

14. இல்லறம்.
15 பொது மதம்.

### ஒவ்வொன்றின் விலை அணா 1

16 தவம்.
17. பலவகை மனிதர். 3508.
18 அவதாரமகிமை.
19. அன்பு.